POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. 7 6 - TN - MS C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# தெலுங்கு கங்கை: முதல்வருடன் ராஜீவ் பேச்சு

Regd: No. TN-MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 9] சென்னை 27-7-1985 சனி வெளியூர் 28-7-1985 ஞாயிறு [இதழ் 275

புதுடெல்லி, ஜூலை. 27- தெலுங்கு கங்கை திட்டம் தொடர்பாக தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடக முதல்வர்களை அழைத்து பிரதமர் ராஜீவ் பேச இருப்பதாக தெலுங்குதேச எம்.பி உபேந்திரா தெரிவித்துள்ளார்.

தெலுங்கு தேசக் கட்சியின் நாடாளுமன்ற தலைவர் உபேந்திரா பிரதமர் ராஜீவ்காந்தியை கடந்த வியாழனன்று சந்திதது‌ப் பேசினார் பிரதமரிடம் தெலுங்கு கங்கைதிட்டம்உள்ளிட்ட பல திட்டங்கள் குறித்தும, அவறறை விரைவாக செயல்படுத்துவதற்கான நடவடிக்கைகள் குறித்தும்உபேந்திரா விவாதித்தார்

தெலுங்கு கங்கை திட்டத்தில் ஆந்திர மாநிலத்திற்கு உரிய நியாயங்கள் குறித்தும் உரிமை குறித்தும், உபேந்திரா பிரதமரிடம் தெரிவித்தார்.

உபேந்திராவின் வாதங்களைக் கேட்ட ராஜீவ் கர்நாடகமுதல்வர் ஹெக்டே சமீபத்தில எழுப்பிய ஆட்சேபணைகளை குறிப்பிட்டார். இந்தப் பிரச்சினையில் பிரதமர் தலையிட்டு மக்களுக்கு நலம் பயக்கும இந்த திட்டம் நிறைவேற ஒத்துழைக்க வேண்டுமென்று உபேந்திரா கேட்டுக்கொணடார்.

இந்தப் பிரச்சினை தொடர்பாக தான் தமிழ்நாடு. ஆந்திரா,கர்நாடக முதல்வாகளைவிரைவில் சந்தித்துபேசுவதாகபிரதமர் ராஜீவ்காந்தி உபேந்திராவிடம் உறுதி கூறினார்

## டோக்கியோவில் புரட்சித்தலைவர்

புதுடெல்லி, ஜூலை 27- முதல்வர் புரட்சித் தலைவர் இன்று ஜப்பான் போய்ச் சேர்ந்தார்.

முன்னதாக டெல்லியில் முதல்வர் புரட்சித்தலைவர் துணை ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன் வெளி விவகார கொள்கை வகுப்பு குழுத்தலைவர் ஜி. பார்த்தசாரதி ஆகியோரை சந்தித்துப் பேசினார்,

இரவு 8-20 மணிக்கு டெல்லியிலுள்ள தமிழ்நாடு இல்லத்திலிருந்துமுதல்வரும் அமைச்சர்களும் அதிகாரிகளும் ஜப்பான் புறப்பட டெல்லி சர்வதேச விமான நிலையத்துக்கு புறப்பட்டனர்,

விமான நிலையத்தில் மாநிலங்களவை துணைத் தலைவர் நஜ்மா எப்பதுல்லா தொழிலாளர் நல அமைச்சர்கள் மாநாட்டில் கலந்துகொள்ள டெல்லி சென்றிருந்த அமைச்சர் கேஏகே நாடாளுமன்ற துணைத்தலைவர் தம்பித்துரை நாடாளுமன்ற கழக அணித் தலைவர் குழந்தைவேலு, மாநிலங்களவை கழக அணி தலைவர்மோகனரங்கம் உள்ளிட்ட நாடாளுமன்ற கழக உறுப்பினர்கள் திரளாகக் கூடி இருந்து புரட்சித் தலைவரை வழி அனுப்பி வைத்தனர்,

கேரள எம். பி. ஜேக்கப்பும் விமான நிலையத்துக்கு வந்திருந்தார். அவரை புரட்சித் தலைவருக்கு கழக எம். பி. ராமகிருஷ்ணன் அறிமுகம் செய்து வைத்தார்.

இன்று பிற்பகல் புரட்சித் தலைவர் ஜப்பான் தலைநகரான டோக்கியோ போய்ச்சேர்ந்தார்.

ஜப்பானில் புரட்சித் தலைவர் 10 நாள் தங்குகிறார்.

ஜப்பான் நிறுவனத்திட்டு இருந்து ஆகஸ்டு 2-ந்தேதி தமிழக அரசுக்கான கப்பலை முதல்வர் பெற்றுக்கொள்வார்.

ஜப்பானில் நரம்பியல் நிபுணர்டாக்டர் கானுவிட்ம் முதல்வர் மருத்துவ பரிசோதனை செய்துகொள்வார்.

புரட்சித் தலைவருடன் அவரது துணைவியார் ஜானகிஅம்மையார், அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் அவரது துணைவியார் சாந்தி. அமைச்சர் முத்துசாமி அவரது துணைவியார் ஜெயலட்சுமி, டாக்டர்கள் நரேந்திரன், பி. ஆர். சுப்பிரமணியம், போக்குவரத்துத் துறைச் செயலாளர் வெங்கடசுப்பிரமணியம் முதல்வரின் துணைச் செயலாளர் பிச்சாண்டி. பாதுகாப்பு அதிகாரிகள் சங்கரசுப்பு, ஆறுமுகம் உதவியாளர் மாணிக்கம் அமைச்சர் முத்துசாமியின் செயலாளர் சுப்பிரமணியம் ஆகியோர் சென்றுள்ளனர்.

## தமிழக ரிக்ஷா தொழிலாளிக்கு ஜனாதிபதி பாராட்டு

சென்னை, ஜூலை 27— நான் சென்னைக்கு முதன் முதலாக வந்தபோது சென்ட்ரல் ரயில் நிலையத்தில் இறங்கி ஒரு ரிக்ஷா தொழிலாளியை அணுகி சீக்கியர் கோவிலுக்குசெல்ல வேண்டுமென்று கூறினேன்.

எனக்குத் தமிழ் தெரியாது அந்த தொழிலாளிக்குஇந்தி தெரியாது. இருந்தும் அந்த தொழிலாளி புரிந்து கொண்டு என்னை சீக்கியர் கோவில் முன் இறக்கிவிட்டார். நான் இரண்டு ரூபாய் கொடுத்தேன். அதில் ஒரு ரூபாய் எடுத்துக்கொண்டு மீதி ஒரு ரூபாயைஎன்னிடம்தந்தார்

இப்படி தமிழகம் கண்ணியத்துக்கும் பெயர் பெற்ற இடமாகும்,

—ஜனாதிபதி ஜையில்சிங்

தமிழகம் வந்த ஜனாதிபதி ஜைல்சிங்கை ஆளுநர் குரானா சந்தன மாலையிட்டு வரவேற்கும் காட்சி

## அவசர நிலை: சரண்சிங் மறுப்பு

புதுடெல்லி, ஜூலை 27- 1975 ஆம் ஆண்டு அவசர நிலையை அமல்படுத்திய போது அகை லோக்தள கட்சி (மக்கள் கட்சி) தலைவர் சரண்சிங்கும் வரவேற்றார் என்று பிரதமர் ராஜீவ்காந்தி நாடாளுமன்றத்தில்கூறியதுதெரிந்ததே. இதற்கு சரண்சிங் மறுப்புத் தெரிவித்தார்.

1975ஆம் ஆண்டில் அவசர நிலை கொண்டுவந்த போது அதற்கு தான் ஆதரவு தரவில்லை என்றும் அவா கூறினார்.

## இலவச சீருடை வழங்க ஏற்பாடுகள் தீவிரம்

**சென்னை, ஜூலை 27- பள்ளிகளில் படிக்கும் 59 லட்சத்து 28 ஆயிரம் ஏழைக் குழந்தைகளுக்கு இலவச உடை வழங்க ஏற்பாடு நடக்கிறது.**

**பேரறிஞர் அண்ணா பிறந்த நாளான செப்டம்பர் 15-ந் தேதி உடைகள் வழங்கப்படும்.**

சத்துணவுத் திட்டத்தில் பயன் பெறும் குழந்தைகளில் முதல்வகுப்பிலிருந்து 8வேது வகுப்பு வரை படிக்கும் ஏழைகுழந்தைகளுக்கு இலவச சீருடை வழங்கப்படும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்தது தெரிந்ததே.

அதன்படி இலவச உடை வழங்கும் திட்டத்திற்கு செயல்வடிவம் கொடுக்கப்பட்டுள்ளது.

பேரறிஞர் அண்ணா பிறந்த நாளான செப்டம்பர் 15ந் தேதி உடைகள் வழங்கப்படும்.

### எண்ணிக்கை விவரம்

33 லட்சத்து 76 ஆயிரம் பள்ளிச் சிறுவர்களுக்கும், 25 லட்சத்து 52 ஆயிரம் சிறுமிகளுக்கும் இலவச உடைகள வழங்கப்படும். மொத்தம் 59 லட்சத்து 28 ஆயிரம் பேர் இத்திட்டத்தால் பலன் பெறுவார்கள்,

அண்ணா பிறந்த நாளில் இத்திட்டத்தின் துவக்கவிழா எல்லாமாவட்டங்களிலும நடைபெறும்

மூன்று மாதங்களில் எல்லாக் குழந்தைகளுக்கும் இலவச சீருடை வழங்க அரசு உத்தரவிட்டுள்ளது

பையன்களுக்கு சட்டையும, காக்கி அரைக்கால் நிஜாரும் வழங்கப்படும்.

### பாவாடை தாவணி

சிறுமிகளுக்கு வெள்ளை ரவிக்கையும், வண்ணத்தில் தேவைக்கு ஏற்ப அரைப்பாவாடையோ அல்லது முழுப்பாவாடையோ வழங்கப்படும்.

தாவணிபோடுகிற பெண் குழந்தைகளுக்குதாவணிக்கான துணியும வழங்கப்படும்.

இதற்காக நல்ல தரமான துணிகளை உரிய காலத்தில் சப்ளை செய்யுமாறு கைத்தறி மற்றும் ஜவுளித் துறை இயக்குனரை அரசு கேட்டுக்கொண்டுள்ளது.

குழந்தைகளுக்கான இந்த துணிகளையும் சமூக விரோதிகள் விற்றுவிடக் கூடாது என்பதற்காக துணியின் ஓரங்களில் வெளியே தெரியாதபடி குழந்தைகளுக்கு அரசு வழங்கும் துணி என்ற முத்திரை அழியாத மையில் பொறிக்கப்பட்டிருக்கும்.

## பஞ்சாப் மாநிலத்தில் போலீஸ் அதிகாரி சுட்டுக் கொலை

அமிர்தசரஸ், ஜூலை 27— பஞ்சாப் மாநிலம் அமிர்தசரசில் இன்று காலை போலீஸ் அதிகாரி ஒருவர் துப்பாக்கியால் சுட்டுக் கொல்லப்பட்டார்.

அமிர்தசரஸ் நகரில் பதட்ட நிலையையும் பரபரப்பையும் ஏற்படுத்தியுள்ள இந்ததுணிகரக் கொலைபற்றியவிவரம் வருமாறு:

அமிர்தசரஸ்நகர்போலீஸ் படையைச் சேர்ந்தவர் சாதுசிங். சப்-இன்ஸ்பெக்டராக பணியாற்றி வந்தார்.

தீவிரவாதிகள் அதிகமாக வசிக்கும் பகுதியான வீரோவால் என்ற இடத்தில் இருந்து அண்மையில் தான் அவர் தன்னுடைய ஜாகையை போலீஸ் லைனுக்கு மாற்றினார்.

உறவினர்கள் சிலரைப் பார்த்துவிட்டு அவர் தனது மோட்டார் சைக்கிளில் திரும்பிக் கொண்டிருந்த போது இந்த பயங்கரச் கொலை நடந்தது.

குருநானக்தேவ்பல்கலைக் கழகம் அருகே அவர் வந்து கொண்டிருந்த போது ஸ்கூட்டரில் வந்த 2 பேர் அவரை துப்பாக்கியால் பலமுறை சுட்டதாகக் கூறப்படுகிறது. படுகாயமடைந்த சாதுசிங் நிலை தவறிமோட்டார் சைக்கிளில் இருந்து கீழே விழுந்தார்.

அவரது உடலில் துப்பாக்கிக் குண்டுகள் பல இடங்களில் துளைத்தன. ரத்தம் பெருக்கெடுத்து ஓடியது.

உடனடியாக அவரை குருடெஜ்பகதூர் மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றார்கள். அங்கே அவர் உயிர் பிரிந்தது.

தகவல் அறிந்த போலீஸ் உயர் அதிகாரிகள் சம்பவம் நடந்தஇடத்துக்குவிரைந்து சென்றார்கள்.

## பூட்டோமகன் சடலம்: பெனாசிர் தகவல்

லண்டன், ஜூலை 27— பூட்டோவின் இளைய மகன் ஷாநவாஸ்கான் பிரான்சில் நாட்டில் பாரிஸ் நகரம் அருகே மரணமடைந்தது தெரிந்ததே. அவரது சடலம் பிரான்ஸ் நாட்டு போலீசாரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

ஷாநவாஸ்கானின் சடலத்தை அவரது சகோதரி பெனாசிர் பிரான்சிலிருந்து பாகிஸ்தானுக்குக் கொண்டு வருவார்.

லண்டனில் நிருபர்களுக்கு பேட்டி அளித்த பெனாசிர் இத்தகவலை ஊர்ஜிதம் செய்தார்.

## ராஜ்யசபை தேர்தல்: கழகம்முடிவு

சென்னை, ஜூலை 27— புதுவை மாநில சட்டமன்றத்திலிருந்து ராஜ்ய சபைக்கு நடைபெறும் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளரை ஆதரிப்பது என்று புதுவை சட்டமன்ற அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் முடிவு செய்து இருக்கின்றது.

புதுவை சட்டமன்ற அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக உறுப்பினர்கள் கூட்டம் பி,கே.லோகநாதன் தலைமையில் நடந்தது.

ராஜ்யசபைத் தேர்தலில் கழகம் எடுக்க வேண்டிய நிலை குறித்து முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கிய அறிவுரையை லோகநாதன் எடுத்துக் கூறினார்.

அதன் பின்னர் இந்திரா காங்கிரஸ் வேட்பாளருக்கு ஆதரவு தருவது என்று ஒருமனதாக முடிவு செய்யப்பட்டது.

(முன் வந்த செய்தி 4-ம் பக்கம்)

## தவபுதல்வர் அறிஞர் அண்ணா

### ஜனாதிபதி ஜைல்சிங் புகழ்மாலை

சென்னை, ஜூலை 27- வெற்றி பெற்ற இந்தியாவின்தவப்புதலவரான பேரறிஞர் அண்ணா. நலிந்த மக்கள் வாழ்வு உயர பாடுபட்ட பெருமதலைவர் ஆவார் என்று ஜனாதிபதி ஜைல்சிங் பாராட்டினார்.

சென்னை வந்துள்ள ஜனாதிபதி ஜைல்சிங் சென்னையில் 3 நாள் தங்கி பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறார்.

இன்று காலை சென்னை அண்ணா நகரில் பஞ்சாப் சங்கம் சார்பில் நடைபெறும் அண்ணா ஆதர்ஷ் மெட்ரிகுலேஷன் பள்ளியை அவர் திறந்து வைத்துப் பேசினார். அண்ணா ஆதர்ஷ் கல்வி வளாகத்தின் புதிய கட்டிடத்திற்கும் ஜனாதிபதி அடிக்கல் நாட்டினார்.

இந்த விழாவுக்கு ஆளுநர் எஸ்.எல்.குரானா தலைமை வகித்தார்.

தேர்வில் அதிக மதிப் பெண்கள் எடுத்து ஆதர்ஷ்பள்ளி மாணவர்களுக்கு செய்தி அறநிலையத்துறை அமைச்சர் ஆர். எம்.வீ. பரிசுகள் வழங்கினார்.

முன்னதாக பஞ்சாப் சங்கத்தலைவர் பல்தேவ்ஜி ஜனாதிபதியை வரவேற்றுப் பேசினார்.

பஞ்சாப் சங்கத்தின் பொதுச்செயலாளர் பி.என் தவான் ஜனாதிபதி ஜைல்சிங்கின் சேவைகளைப் பாராட்டிப் பேசினார்

தமிழக கைத்தறித்துறை அமைச்சர் வி. வி. சாமிநாதன் மற்றும் முக்கிய பிரமுகர்கள் விழாவில் கலந்து கொண்டனர்.

ஜனாதிபதியுடன் வந்துள்ள அவரதுமகள் டாக்டர் பஞ்சிம்கவுரும் விழாவில் கலந்து கொண்டார்.

ஜனாதிபதி ஜைல்சிங் இந்தியில் உரையாற்றினார். அவரது இந்திபேச்சு தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது.

விழாவில் ஜனாதிபதி ஜைல்சிங் பேசியதாவது:-

கல்வித்துறையில் இந்த சங்கம் பயனுள்ள தொண்டினை ஆற்றி வருகிறது.

இந்த வளாகத்திற்கு மறைந்ததலைவர் அண்ணாவின் பெயர் வைக்கப்பட்டுள்ளது என்பது முக்கியமாகும்,

அண்ணா தமிழகத்தின்— இந்தியாவின் சிறந்த தலைவராக— உயர்ந்த தலைவராக விளங்கியவர்.

சமுதாயத்தில் பொருளாதாரத்தில் பின்தங்கியிருக்கும் ஏழை எளிய மக்களது வாழ்க்கைத்தரம் உயர பாடுபட்டவர்.

தமிழக வரலாற்றில்- இந்திய வரலாற்றில் அண்ணாவின் பெயர் பொன்னெழுத்தில்பொறிக்கப்பட்டுள்ளது.

அவரது வழியில் நாமும் பாடுபட்டு வறுமைக் கோட்டுக்கு கீழ் உள்ள மக்களது வாழ்க்கை தரத்தை உயர்த்துவது அவருக்குப்பெருமை சேர்ப்பதாகும்.

அண்ணா இந்தியாவின் உயர்ந்த தலைவர்களுள் ஒருவர்.

இந்திய நாட்டு சுதந்திரத்திற்காக பல தலைவர்கள் பாடுபட்டனர் ராஜாஜி, டாக்டர் ராதாகிருஷ்ணன், வி. வி. கிரி, பாரதியார், காமராஜர் போன்றவர்கள் பாடுபட்டுள்ளனர்.

இந்திய மக்களில் படித்த பெண்கள் குறைவாகவே உள்ளனர். இதில் அதிக கவனம்செலுத்தவேண்டும்.

### பாராட்டு

தமிழகத்தில் பெண் கல்வி நல்ல முன்னேற்றம் அடைந்து வருகிறது.

ஆண்களோடு பெண்கள் சரிநிகா சமானமாக வளர வேண்டும். இப்போது பெண்கள் கல்வியில் ஆண்களை விட முன்னேற்றம் பெற்று வருகின்றனர்.

வேற்றுமையில் ஒற்றுமை காண நாம் முற்பட வேண்டும். இங்குள்ள பஞ்சாபியர் தமிழர்கள் என்றஉணர்வோடு வாழவேண்டும்,

இந்தியாவில் 15 மொழிகள் தேசிய மொழிகளாக உள்ளன. ஆனால் குறுகிய நோக்கம் இருப்பதுகூடாது,

டெல்லியில் தமிழ் சங்கத்தினர் கல்வித் தொண்டு செய்து வருகின்றனர். அதுபோல மற்றவர்களும் செய்து வருகின்றனர். மும்மொழிமட்டுமல்ல, நாம் ஐந்து மொழிகளைக் கற்றுக் கொள்ளதிறமைஇருக்கிறது.

மொழிப் பிரச்சினை ஏற்பட்டபோது பண்டிதநேரு ஒரு உறுதி மொழி தந்தார். 15 மொழிகளும் தேசிய மொழி என்றார், இதன் மூலம் ஒற்றுமை ஏற்பட முடியும்.

இந்த வளாகத்திற்கு மறைந்த அண்ணாவின் பெயர் வைக்கப்பட்டிருக்கிறது. அந்த மாபெரும் தலைவரது லட்சியத்தை நாம் கடைபிடிக்க வேண்டும்.

இவ்வாறு ஜனாதிபதி ஜைல்சிங் கூறினார்.

விழாவின் இறுதியில் ஆதார்ஷா பள்ளிகளின் முதல்வா திருமதி வி.ராதாமொழிராவ் நன்றி கூறினார்.



**கற்க...**

உலகில் பெருகியுள்ள நூல்களெனுங் கடலில் எதைக் கற்பது, எதை விடுப்பது என்று யோசிக்கத் தோன்றும் நல்வழி கூறும் நூல்கள் எவையென ஓர்ந்து கற்போமாக.

—பேரறிஞர் அண்ணா

**தொழில்**

செய்யுந் தொழில் எதுவாயிருக்கட்டும், அதில் உன் உள்ளம் ஒன்றவில்லையென்றால் அது தொழிலேயல்ல அதன் மூலம் வரும் பயனும் பயனல்ல.

—தந்தை பெரியார்

# பஞ்சாப் பிரச்சினையில் பாரதப் பிரதமர்

இந்தியாவின் ஒற்றுமைக்கும் ஒருமைப் பாட்டுக்கும் ஒரு சவாலாகக் கிளப்பப்பட்டிருந்த 'பஞ்சாப்' பிரச்சினைக்குத் தீர்வு காணப்பட்டுவிட்டது.

இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தியும் அகாலி தளத் தலைவர் சாந்த் ஹர்சந்த்சிங் லோங்கோவாலும் அதற்கான உடன்பாட்டில் கையெழுத்திட்டுவிட்டார்கள்.

"அகாலி தளத்தினருக்கும் மத்திய அரசினருக்கும் இடையே மோதல் நடைபெற்றுவந்த காலம் இத்துடன் முடிந்துவிட்டது" என்று லோங்கோவாலே தெரிவித்துவிட்டார்.

இனி பஞ்சாபில் மாமூல் வாழ்க்கை திரும்பும்; அமைதியும் நல்லெண்ணமும் தழைக்கும். அக்டோபர் 5-ஆம் தேதிக்குள் மாநில சட்டசபைக்குத் தேர்தல் நடத்தப்பட்டு புதிய அமைச்சரவை பொறுப்பேற்கும்.

அடுத்த சில நாட்களில் உச்சநீதி மன்றத்தின் தலைமை நீதிபதியை ஆலோசனை கலந்து கொண்டு இந்த கமிஷன்களும் டிரிப்யூனலும் செயல்படத் துவங்கும்.

அதே போன்று அனந்தபூர் சாகிப் தீர்மானத்தின் மத்திய—மாநில உறவுகள் பற்றிய பிரிவு நீதிபதி ரஞ்சித் சிங் சர்க்காரியா கமிஷனின் ஆய்வுக்காக விடப்படும்.

மறைந்த பிரதமர் அன்னை இந்திராவின் விருப்பப்படியே சண்டிகார் நகரம் பஞ்சாபுக்குக் கொடுக்கப்படும்.

## மற்றொரு கமிஷன்

பஞ்சாபில் உள்ள ஹிந்தி பேசும் பகுதிகளை நிர்ணயித்து அரியானாவுக்கு மாற்றுவதற்காக ஒரு கமிஷனும், பஞ்சாப்—அரியானா எல்லைப் பகுதிகள் சம்பந்தமாக ஆய்ந்து, எந்த மாநிலத்துக்கு எந்தெந்தப் பகுதிகள் [illegible] என்று நிர்ணயிக்க மற்றொரு கமிஷனும் அமைக்கப்படும்.

ரவி, பியாஸ் நதிகளின் உபரி நீரில் சம்பந்தப்பட்ட மாநிலங்களின் பங்கு என்ன என்பது பற்றி டிரிப்யூனல் முடிவு கூறும்.

அகிலஇந்திய குருத்வாரா சட்டம் இயற்றுவது பற்றியும் பரிசீலிக்கப்படும்.

பஞ்சாபி மொழி பிரசாரத்துக்கு மத்திய அரசு நடவடிக்கைகளை மேற்கொள்ளும்.

ராணுவத்திலிருந்துநீக்கப்பட்ட சீக்கியர்களுக்கு மறுவாழ்வு அளிக்கும் நடவடிக்கைகள் விரைந்து மேற்கொள்ளப்படும்.

இதன் மூலம் இந்திய நாட்டின் வரலாற்றில் மிகவும் நெருக்கடியான ஒரு காலகட்டத்திற்கு முடிவு கட்டப்படுகிறது.

இந்த ஒப்பந்தத்தை வரவேற்காத இந்தியர்களே இருக்க முடியாது. பிரதமர் பொறுப்பை ஏற்றுள்ள, ராஜீவ்காந்திக்கு இந்த ஒப்பந்தம் ஒரு மாபெரும் அரசியல் சாதனையாகும்.

இந்தியாவின் அரசியல் வரலாற்றில் ஒரு புதிய சகாப்தம் துவங்குவதை இந்த உடன்பாடு குறிக்கிறது என்று சஞ்சீவரெட்டி வருணித்திருக்கிறார். இதனை தேசபக்திமிக்க அனைவரும் வரவேற்பர் என்று அவர் மேலும் கூறியிருக்கிறார்.

தென்னகத்தில் இந்திய ஒருமைப்பாட்டின் தூதுவராக விளங்கும் தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவர் அவர்கள் இந்த உடன்பாட்டைப் பொன் எழுத்துக்களால் பொறிக்க வேண்டும் எனக் குறிப்பிட்டிருக்கிறார்.

கொலை, நாசவேலை, தீவைப்பு, கொள்ளை முதலிய செயல்களில் ஈடுபட்டும், புனிதமான பொற்கோவிலை சமூகவிரோதிகளின் பாசறையாகவும் தளவாடக் கிடங்காகவும் மாற்றி வெறியாட்டம் ஆடிய பிந்தரன்வாலே கூட்டமும், வெளிநாடுகளில் இருந்துகொண்டு இந்தியாவுக்கு விரோதமாகச்செயல் பட்டுவரும் தேச விரோதக் கும்பலும் இந்த உடன்பாட்டை ஏற்க முடியாமல் போகலாம்.

ஆனால், அமைதியை விரும்பும் தேசபக்த சீக்கிய மக்கள் அனைவரும் இதனை உளப்பூர்வமாக ஏற்று முடிவுறுக் கொண்டிருக்கிறார்கள்.

பிரதமர் ராஜீவ்காந்தி அனைத்து எதிர்க்கட்சிகளையும் கலந்து, கருத்தறிந்து ஜனநாயக ரீதியில் இந்த உடன்பாட்டை எட்டியிருக்கிறார் மிகுந்த மன உறுதியும் பொறுப்புணர்ச்சியும் கொண்ட லோங்கோவால் அதற்கு முழுமையாக ஒத்துழைத்திருக்கிறார்.

சீக்கிய தீவிரவாதிகளைப் போலவே அரியானா ராஜஸ்தான் மாநிலங்களிலுள்ள எதிர்க் கட்சிகளும் இந்த உடன்பாட்டின் சில அம்சங்களை ஏற்க மறுத்திருக்கிறார்கள்.

எனினும் இரண்டு தீவிரவாதப் போக்குகளுக்கும் இடையே நாட்டுநலனையே தலையாய நோக்கமாகக் கொண்டு உடன்பாடு ஏற்பட்டிருக்கிறது. ராஜீவ் காந்தியும் லோங்கோவாலும் காய்தல், உவத்தல் அகற்றி பிரச்சினைகளை அலசி ஆய்ந்து இந்த முடிவுக்கு வந்திருக்கிறார்கள். எதிர்க்கட்சியினர்கூட இந்த ஒப்பந்தம் வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தோற்றுவித்திருப்பதாகப் புகழாரம் சூட்டியிருக்கிறார்கள்.

மோதல் அரசியலைத் தவிர்த்து, மாற்றுக் கருத்துகளுக்கும் மதிப்பளித்து மிகுந்த நிதானத்துடனும், தேசபக்தியுடனும் செயல்பட்டுவரும் ராஜீவ் காந்தியின் அணுகுமுறை பாராட்டுக்குரியது மறைந்த பிரதமரின் அடிச்சுவட்டைப் பின்பற்றிச் செயல்பட்டு வரும் பிரதமர் இதன் மூலம் புகழேணியின் உச்சிக்கே சென்றுவிட்டார்.

இதே போன்று இந்தியாவின் ஜனநாயகத்தையும் பாதுகாப்பையும் ஒருமைப்பாட்டையும், அச்சுறுத்திக் கொண்டிருக்கும் அஸ்ஸாம், குஜராத் காஷ்மீர் பிரச்சினைகளையும் வெற்றிகரமாகத் தீர்ப்பார் என்ற நம்பிக்கை தற்போது மேலும் வலுப்பெற்றிருக்கிறது.

இலங்கைத் தமிழர்களின் இன்னலைத் தீர்ப்பதற்கு நமது பிரதமருக்குப் புதிய சக்தி பிறந்திருக்கிறது.

## சாக்குப் போக்கு இனி இல்லை

எதற்கெடுத்தாலும் பஞ்சாப்கலவரங்களைச்சுட்டிக் காட்டி தமிழனத்தைக் கருவறுக்கும் வேலையில் ஈடுபட்டிருந்த சிங்கள இனவெறிக் கும்பல் இனிமேலும் தனது வெறித்தனங்களுக்கு நியாயம் கற்பிக்க முடியாது. திம்பு பேச்சுவார்த்தைகள் நல்ல பலன்களைத் தோற்றுவிப்பதற்கும் தமிழ் மக்களின் உரிமைகள் நிலைநாட்டப்படுவதற்கும் 'பஞ்சாப் பிரச்சினையில்' நாம் எட்டியிருக்கும் உடன்பாடு நிச்சயமாக உதவும்.

-: க. சுப்பு :-

# 2 கப்பல்களை இழந்த கம்பெனியின் அடுத்த கப்பலும் மூழ்குகிறது

கொச்சி, ஜூலை 27— ஒருமாதத்திற்கு முன்பு மாயமாய் மறைந்த இரண்டு கப்பல்களுக்கு உரிமையாளராக விளங்கும் நிறுவனத்தின் மற்றொரு கப்பலும் கொச்சி துறைமுகத்தில் வேகமாக மூழ்கிக் கொண்டிருக்கிறது.

பம்பாயிலுள்ள மெய்னி கப்பல் கம்பெனிக்கு சொந்தமான "நித்ய அமர்" என்ற கப்பல் தற்போது கொச்சி துறைமுகத்தில் உள்ளது.

கப்பலில் ஓட்டை ஏற்பட்டு கப்பலுக்குள் நீர் புகுவதால் அந்த கப்பல் மூழ்கிக் கொண்டிருப்பதாக ஊழியர் ஒருவர் தெரிவித்துள்ளார். கப்பலில் புகும் தண்ணீரை வெளியேற்றும் முயற்சி 24 மணி நேரமும் நடந்துகொண்டிருந்தாலும் கப்பல் ஒரு பக்கமாக சாய்ந்து நிற்பதாகத் தெரிகிறது.

### அதிக சுமை

இந்தக் கப்பல் கம்பெனிக்கு சொந்தமான நித்யநானக், நித்யராம் ஆகிய இரு கப்பல்களும் மர்மமாக மறைந்தது தெரிந்ததே.

தற்போது மூழ்கிக்கொண்டிருக்கும் நித்யஅமர் கப்பலிலுள்ள 13 ஊழியர்களும் கொச்சி துறைமுக கப்பல் ஊழியர் சங்கத் தலைவர்களுடன் தொடர்பு கொண்டு பேசி வருகிறார்கள்.

இந்தக் கப்பலில்அளவுக்கு மீறி சுமைஏற்றியதால்தான் இந்த நிலை ஏற்பட்டதாக ஊழியர்கள் தெரிவித்துள்ளனர். இந்தக் கப்பல் 30 ஆண்டுகளுக்குமுன் ஜப்பான் நாட்டில் வாங்கப்பட்டதாகும்.

# அமைச்சர் நிகழ்ச்சிகள்

**நல்லுசாமி**

ஜூலை 28— மயிலாடுதுறை, குத்தாலம், குடவாசல், குடந்தை.

# நாட் குறிப்பு

**அயன்புரம்**

நாள்: 27-7-85 சனி மாலை 7 மணி இடம்: அயன்புரம் ஜாயின்ட் ஆபீஸ் அருகில் தலைமை: மா. சா. எத்திராசன் முன்னிலை: டாக்டர் ஆறுமுகபாண்டியன், ஆ.ராசாராம். பேசுவோர்: அமைச்சர் ஆர்.எம்.வீ. மேலவைக் கொறடா ஜேப்பியார், வாரியத்தலைவர்கள்: சுலோசனாசம்பத், லியாகத்அலிகான். ஜே.டி.சி. பிரபாகரன், கோடம்பாக்கம் குமார் சட்டமன்ற உறுப்பினர்கள் சைதை துரைசாமி, வளர்மதி, தமிழ்மணி மற்றும் டி.ஆர். சுந்தரம் உள்ளிட்ட பலர்.

# முன்னாள் அதிகாரி மர்ம சாவு

புதுடெல்லி, ஜூலை 27- மத்திய அமைச்சரவையின் முன்னாள் செயலாளரும், ஓய்வு பெற்ற ஐ.சி.எஸ். அதிகாரியுமான எஸ். எஸ். கோர் புதுடெல்லியில் உள்ள அவரது இல்லத்தில் இறந்து கிடந்தார். அவருக்கு வயது 83.

கடந்தசனிக்கிழமைமுதல் அவர் காணமல் போனார் என்றும் அவரது உறவினர்கள் தேடிசென்ற போது ஒரு அறையில் அவர்இறந்து கிடந்தார் என்றும் டெல்லி போலீஸ் துணை கமிஷனர் கூறினார்.

# 8 லட்சம் பேருக்கு ரூ.250கோடி கடன்

## டாக்டர் நாவலர் தகவல்

மதுரை, ஜூலை 27— இந்த ஆண்டு சிறுதொழில் தொடங்க 8 லட்சம் பேருக்கு 250 கோடி ரூபாய் கடனுதவி வழங்கப்படவுள்ளதாக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தெரிவித்தார்.

மதுரை வருவாய் கோட்டத்தில் வறுமை கோட்டிற்கு கீழ் உள்ள 10,000 பேருக்கு வீட்டுமனை பட்டாக்களை நிதி அமைச்சர் நாவலர் வழங்கினார்.

10,000 பேருக்கு வீட்டு மனைப்பட்டா வழங்கும் விழா சமயநல்லூர் தொகுதியில் கூடல் நகர் அருகே உள்ள ரயிலார் நகரில் நடைபெற்றது.

விழாவுக்கு வந்திருந்தவர்களை மதுரை மாவட்ட வருவாய் அதிகாரி இ.ராஜமாணிக்கம் வரவேற்றார். மாவட்ட ஆட்சித் தலைவர் இரா. வரதராஜு தலைமை பொறுப் பேற்றார். 10,000 பேருக்குவீட்டு மனை பட்டாக்களைவழங்கி நிதியமைச்சர் நாவலர் பேசியதாவது:-

இந்த விழாவில் கலந்து கொள்வதில் பெரும் மகிழ்ச்சி அடைகின்றேன். 10,000 பேரையும் ஒரே இடத்தில் கூட்டி வைத்து பட்டா வழங்குவது மிகவும் பாராட்டப்பட வேண்டிய ஒன்று.

### வீடுகட்ட கடனுதவி

இன்று பட்டா பெறும் 10,000 பேரில் 4000 பேர் ஆதிதிராவிட வகுப்பைச் சார்ந்தவர்கள். இன்று முதல் இவர்கள் தங்களுக்கு என்று சொந்தமாக ஒரு இடம் இருக்கிறது என்ற நிம்மதியுடன் வாழலாம்.

எதிர்காலத்தில் வீடு கட்ட கடன் வழங்க பல திட்டங்களைதீட்டிஇருக்கின்றோம். புரட்சித் தலைவர் அரசு பிற்பட்டவர் சமுதாயத்தை மேம்பாடு அடையச் செய்ய பல நல்ல திட்டங்களை நிறைவேற்றி வருகிறது. மனிதனுக்கு மனிதன் சமம், வேறுபாடுகள் இருக்கக் கூடாது.

1000 ஆண்டுகளாக புறக்கணிக்கப்பட்ட ஒதுக்கப்பட்டமக்கள்இன்றுபுரட்சித் தலைவர் ஆட்சியில் நல்வாழ்வு பெறுகின்றனர்.

அண்ணா, [illegible] அடிகள் பகுத்தறிவுத் தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா போன்றவர்கள் தாழ்த்தப்பட்ட மக்களை முன்னேற செய்யவேண்டும் என்று கூறினார்கள். அதைத்தான் இன்றைய புரட்சித் தலைவர் அரசு செய்து வருகிறது.

என்ஜினீயர்கள், டாக்டர்கள், பட்டப்படிப்பு படிக்கும் தாழ்த்தப்பட்ட மாணவர்களின் கல்வி செலவு முழுவதையும் அரசே ஏற்றுக் கொள்கிறது. தொடக்க கல்வி முதல் எல்லா செலவுகளையும் அரசு ஏற்றுக் கொளகிறது.

### தொழில் தொடங்க உதவி

தாழ்த்தப்பட்டவர்களுக்கு வீடுகட்ட 3 செண்டு நிலமும் 8 ஆயிரம் ரூபாய் செலவில் வீடுகளும் கட்டி கொடுக்கப்படுகின்றன.

இவர் தொழில் தொடங்க தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகள் மூலம் எந்தவித ஜாமீனும் இல்லாமல் ரூபாய் 5000 வரை 4 சதவீத வட்டியில் கடன்கள் தரப்படுகின்றன.

இவற்றை பயன்படுத்தி ஏராளமான தொழில்கள் ஆரம்பித்து தாங்களும் முன்னேறி நாட்டையும் முன்னேற்றம் அடைய செய்ய வேண்டும்.

தமிழ்நாட்டில் உள்ள 52 வங்கிகள் மூலம் சென்ற ஆண்டு 162 கோடி ரூபாய் தொழில்தொடங்ககடனாக அளிக்கப் பட்டது. இதன் மூலம் 5 லட்சம் பேர் பயன் பெற்று உள்ளனர். இந்த நடப்பு ஆண்டு 1985-86ல் ரூபாய்250கோடி தர உள்ளார்கள். இதன் மூலம் 8 லட்சம் பேர் பயன் பெறலாம்.

பெருந்தலைவர் காமராஜ் அவர்கள் முதல் அமைச்சராக இருந்தபொழுது 16,000 பேர் 20 ரூபாய் வீதம் முதியோர் உதவித் தொகை பெற்றனர்.

பின்னர் 51,000 பேர் 25 ரூபாய் வீதம் முதியோர் உதவித்தொகைபெற்றனர்.

இன்றுபுரட்சித்தலைவர் ஆட்சியில் 2,63,000 பேர் மாதம் ரூபாய்35 வீதம் முதியோர் உதவி தொகைபெறுகின்றனர். அத்துடன் அவர்களுக்கு வருடத்திற்கு 2 வேஷ்டிகள், சேலைகள், மாதம் 4 கிலோ அரிசி சத்துணவு கூடங்களில் இலவச சத்துணவு போன்றவை கொடுக்கப்படுகிறது. மதுரை மாவட்டத்தில் மட்டும் 32,571 பேர் முதியோர் உதவித்தொகை பெறுகின்றனர். ஏழை எளிய மக்களின் பாதுகாவலர் முதல்வர் புரட்சித் தலைவர் தான்என்று நிதியமைச்சர் நாவலர்பேசினார்.

விழாவில் சட்டமன்ற உறுப்பினர்கள் சிவகுமார், மாரிமுத்து, ஆண்டிஅம்பலம் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள். உதவி கலெக்டர் குமாரசாமி நன்றி கூறினார்.

# 40 வீடுகளில் திருடிய பலே ஆசாமி கைது

சென்னை, ஜூலை 27— பூட்டை உடைத்து 40 வீடுகளில் திருடிய ஆசாமி ஒருவரை சென்னை போலீசார் கைது செய்தனர். அவரிடம் இருந்து 30 ஆயிரம் பெறுமானம் உள்ள தங்க நகைகள், ரேடியோ, துணிமணிகள் ஆகியவற்றையும்போலீசார் கைப்பற்றினார்கள்.

அந்த ஆசாமியின் பெயர் மூர்த்தி (வயது 38)ஒட்டேரியைச் சேர்ந்தவர்

செம்பியம் குற்றப்பிரிவு போலீஸ் இன்ஸ்பெக்டர் கோபாலகிருஷ்ணன், சப்-இன்ஸ்பெக்டர் குப்புசாமி ஆகியோர் மூர்த்தியைகைது செய்து மேலும் இதுகுறித்து விசாரணை செய்து வருகிறார்கள்.

# லைலா மஜ்னுவின் தந்தை

மாஸ்கோ, ஜூலை 27— லைலாமஜ்னு என்ற புகழ் பெற்ற அமர காவியத்தை அறியாதவர்கள் இல்லை, ஆனால் அந்த அமரகாவியத்தைப் படைத்தவர் யார் என்பதுபெரும்பாலோருக்கு தெரியாது.

அந்தக்காதல்காவியத்தை தந்தவர் அலிசேர் நவாப் என்ற கவிஞர். இன்றைய சோவியத் யூனியனின் உஸ்பெக் குடியரசில் பிறந்தவர்.

ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்ன இந்தக் கவிஞர் "ஹம்சா" என்ற கவிதைத் தொகுப்பைத் தந்தார். அந்தக் கவிதைத்தொகுப்பில் இடம் பெற்றதுதான் லைலா மஜ்னு.

அந்தக் கவிஞரின் 500வது ஆண்டு விழா உஸ்பெக் குடியரசில் கொண்டாடப்படுகிறது. அதனையொட்டி அலிசேர்நவாயின் கவிதைகள் அனைத்தும் அடங்கிய பெரிய தொகுப்பு வெளியிடப்படுகிறது.

# நாப்தா ஏற்றுமதி

சென்னை, ஜூலை27- நாட்டின்எண்ணெய்சுத்திகரிப்புஆலைகளில்1985-86ம் ஆண்டில் சுத்திகரிப்பு செய்யப்படுகிற பம்பாய் ஆழ்கடல் கச்சா எண்ணெயின் அளவு அதிகரிப்பதைத்தொடர்ந்து உபரியாக கிடைக்கவிருக்கிற சுமார் 15 லட்சம் டன் நாப்தாவை ஏற்றுமதி செய்ய அரசு தீர்மானித்துள்ளது.

# கல்பாக்கத்தில் 2-வது அணுமின் நிலையம்

சென்னை, ஜூலை 27- சென்னை அருகே கல்பாக்கத்தில் இரண்டாவது அணுமின் நிலைய பிரிவு அடுத்த மாதம் (ஆகஸ்ட்டில்) தொடங்கவிருக்கிறது என்று அணு சக்தி கமிஷன் தலைவர் ராஜாராமண்ணா தெரிவித்தார்,

"சென்னை பத்திரிகையாளர் சங்கக்கூட்டம் நடைபெற்றது. இதில் கலந்து கொண்டு பேசிய அணுசக்திக் கமிஷன் தலைவர் டாக்டர் ராஜாராமண்ணா கூறியதாவது:-

கல்பாக்கத்தில் உள்ள அணுமின் நிலையத்தில் தற்போது ஒரு யூனிட் தான் இயங்குகிறது. மேலும் ஒரு யூனிட் அங்கே தொடங்கப் பட்டவிருக்கிறது.

இந்த இரண்டாவதுயூனிட் அடுத்தமாதம் ஆகஸ்ட்டில் ஆரம்பிக்கப்படும். ராஜஸ்தான் மற்றும் தாராபூர் ஆகிய இடங்களில் உள்ள அணுமின் நிலையங்களில் அமைக்கப்பட்டதில் சில தவறுகள் ஏற்பட்டன, அத்தகைய தவறுகள் எதுவும் இல்லாத வகையில் கல்பாக்கத்தில் உள்ள அணுமின் நிலையம் வடிவமைக்கப்பட்டுள்ளது.

இன்னும் 10 அல்லது11 ஆண்டுகளில் இந்த அணுமின் நிலையத்தில் இருந்து 500 மெகாவாட் மின் உற்பத்தி செய்யப்படும் நிலை ஏற்பட்டுவிடும்.

அதற்குள் இங்கு சில தொழில் நுட்ப பிரச்சினைகள் தீர்க்கப்பட்டுவிடும்.

விவசாயத்துக்கு அடுத்தபடியாக இன்று நாட்டில் முக்கியத்துவம் வாய்ந்தது மின்சாரம் தான் நாட்டின் முன்னேற்றத்துக்கு மின்சாரம் பெரிதும் உதவியாக இருக்கிறது.

அணுசக்திக்காக அதிக நிதி ஒதுக்க வேண்டும்,7வது ஐந்தாண்டு திட்டத்தில் 2 ஆயிரம் கோடி ஒதுக்கவேண்டும் என்று கேட்கப் பட்டுள்ளது.

### வீணாவது இல்லை

அணுமின்நிலையங்கள் லாபகரமாகவே இயங்கி வருகின்றன. அதற்காக செலவிடப்படும் தொகை வீணாவது இல்லை.

இவ்வாறு ராஜா ராமண்ணா கூறினார்,

கல்பாக்கத்திலுள்ள சென்னை அணுமின் நிலையத்தின் உற்பத்தித்திறன் 1985—ஜூன் மாதத்தில் 94 சதவீதத்தை எட்டியுள்ளது. கடந்த மார்ச் மாதத்திலிருந்துபராமரிப்பு பணிக்கு பின்னர் இந்நிலையம் சிறப்பாக இயங்கி வருகின்றது.

### உற்பத்தி உயரும்

1984 ஜனவரி 27—ம்தேதி மின் உற்பத்தி துவங்கப்பட்ட பின்னர் இவ்வாண்டில் 1233 மில்லியன் யூனிட் மின்சார உற்பத்தி செய்யப் பட்டுள்ளது. இதன் இலக்கீடு 1150 மில்லியன் யூனிட்டாகும் என்று மாநிலங்கள் அவையில் மத்திய விஞ்ஞானம் மற்றும் தொழில்நுட்ப துறை இணையமைச்சர் சிவராஜ் பாடீல் தெரிவித்தார்.

# ஏழைகளுக்காக உழைக்கும் எம்.ஜி.ஆரை பாராட்டுவது எங்கள் கடமை

## காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர் பேச்சு

மதுரை, ஜூலை 27— ஏழைகளுக்காகபாடுபடும் முதல்வர் எம். ஜி. ஆரை பாராட்டுவது எங்கள் கடமை என்று காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர் ஆண்டி அம்பலம் மனம் திறந்து கூறினார்.

10,000 பேருக்கு வீட்டு மனை பட்டா வழங்கும் விழாவில் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கிய ஆண்டி அம்பலம் பேசியதாவது:-

முதல்வர் புரட்சித் தலைவர் அவர்கள் ஏழை, எளிய மக்களின் மீது அன்பு கொண்டு பலநல்ல திட்டங்களை செயல்படுத்தி வருகின்றார், 10,000பேருக்கும் ஒரே நேரத்தில், ஒரே இடத்தில் ஒன்று சேர்த்து பட்டா வழங்குவது சுலபமான காரியம் அல்ல. 1000 பேரை ஒன்று சேர்ப்பதே கடினம். இங்கு 10,000 பேரையும் கூட்டி உள்ளீர்கள், இதற்காக என்னுடைய பாராட்டுக்களை அரசுக்கும் தமிழக முதல்வர், மற்றும் இந்த நிகழ்ச்சி ஏற்பாடு செய்தவர்களுக்கும் தெரிவித்துக்கொள்கின்றேன்.

நான் தொடர்ந்து 4 தடவை சட்டமன்ற உறுப்பினராக இருக்கின்றேன். இன்றுதான் இவ்வளவு பெரிய விழாவை காண்கின்றேன். தமிழக முதல்வர் புரட்சித்தலைவர்காலத்தில் தான் இது போன்ற செயல்கள் நடைபெறுகின்றன.

என்னடா காங்கிரஸ்காரர் இவ்வளவு பாராட்டுகின்றார் என்று நினைக்கக் கூடாது நல்லது யார் செய்தாலும் பாராட்டியே தீர வேண்டும். பாராட்டுவது எங்கள் கடமை முதல்வர் அறிவிக்கும் நல்ல திட்டங்களுக்கு அரசு ஊழியர்கள் உறுதுணையாக இருந்து திட்டங்களை நல்ல முறையில் செயல்படுத்த வேண்டும்,

### நீடுவாழ்க

ஏழை, எளிய மக்கள் வாழ பல நல் திட்டங்களைக் கொண்டு வரும் தமிழக முதல்வர் நீடுழி வாழ என்னுடைய வாழ்த்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்

இவ்வாறு ஆண்டி அம்பலம் பேசினார்.

# புதிய ஜவுளி உற்பத்தி மூலம் வேலை வாய்ப்பு அதிகரிப்பு

புதுடெல்லி ஜூலை 27— புதிய ஜவுளி கொள்கையின் மூலம் துணி உற்பத்தி அதிகரிக்கும் என்றும் இதன் மூலம் நாட்டில் வேலை அதிகரிக்க வாய்ப்பு ஏற்படும் என்றும் மக்களவையில் மத்திய சப்ளை மற்றும் டெக்ஸ்டைல்ஸ் துறை இணை அமைச்சர் சந்திரசேகர் சிங் தெரிவித்தார்.






Edited and Published by K. RAVINDRAN on behalf of Thagamani Publications and Printed by All India Anna D.M.K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road MADRAS 600029.

# தெலுங்குகங்கை திட்டம்: மூப்பனார் யோசனை

சென்னை, ஜூலை 27- தெலுங்கு கங்கை திட்டம் நிறைவேற தமிழகம், ஆந்திரம், கர்நாடகம் ஆகிய 3 மாநிலங்களைச்சேர்ந்த முதல்வர்களும் சந்தித்துப் பேசவேண்டுமென்று கருப்பையா மூப்பனார் வேண்டுகோள் விடுத்தார்.

சென்னையில் நிருபர்களிடம் பேசுகையில் இதைத் தெரிவித்த மூப்பனார் மேலும் கூறியதாவது:-

தெலுங்கு கங்கை திட்டம் தொடர்பாக 3 மாநில முதல்வர்களும் சந்தித்து பேசினால் அந்தத் திட்டம் நிச்சயம் நிறைவேறும். 3 மாநில முதல்வர்களும் கூடிப் பேசுவார்கள் என நம்புகிறேன்.

தமிழக முதல்வர் எம். ஜி. ஆரை டெல்லியில் தமிழ் நாடு இல்லத்தில் சந்தித்தேன். அவர் என்னை வாங்க வாங்க என்று அன்புடன் வரவேற்றார். அவர் இப்போது நன்றாகப் பேசுகிறார்.

தங்களுடைய ஜப்பான் பயணம் நல்லபடியாக அமைய இறைவனைப் பிரார்த்திக்கிறேன் என்று நான் கூறினேன்.

பஞ்சாப் பிரச்சினையை தீர்க்க முடியாது என்று பலரும் தெரிவித்தார்கள். பிரதமர் ராஜீவ் காந்தி தேச நலன் கருதி, எந்த மாநிலத்தவரையும் பாதிக்காத வகையில் இந்தப் பிரச்சினையைசுமுகமாக தீர்த்து வைத்துள்ளார்.

இன்று இந்தியாவிலுள்ள அனைத்து தரப்பினரும் பிரதமர் ராஜீவுக்கு பாராட்டு தெரிவித்துள்ளனர். குஜராத் மாநிலத்தில் சில சமூக விரோதிகள்தான் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளார்கள், இந்தப் பிரச்சினையையும்சுமுகமாகசமாளிப்போம்.

இவ்வாறு மூப்பனார் கூறினார்.

மூப்பனார்தமிழ் நாட்டில் 2 நாட்கள் சுற்றுப்பயணம் செய்கிறார்.

## பழனியாண்டி பேட்டி

முன்னதாக நிருபர்களிடம் பேசிய பழனியாண்டி கூறியதாவது:

தமிழக காங்கிரஸ் நூற்றாண்டுவிழா குழுவினர் தமிழகம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்து காங்கிரஸ் தொண்டர்கள் கருத்தை அறிந்தனர். பஞ்சாயத்து தேர்தலை சந்திக்க காங்கிரஸ் தயாரான நிலையிலேயே இருக்கிறது. காங்கிரஸ் சின்னத்திலேயே போட்டியிட வேண்டும் என்றும் தொண்டர்கள் வலியுறுத்தியுள்ளனர்.

பிரதமர் ராஜீவ் நீடுவாழவும் மக்கள்பிரச்சினைகளை சுமுகமாகத் தீர்க்கவும் எல்லா வலிமைகளையும் தரவேண்டி சென்னையிலுள்ள முக்கிய ஆலயங்களில் பூஜை நடத்தி அந்தப் பிரசாதங்களை பிரதமருக்கு அனுப்பியுள்ளோம்.

இவ்வாறு பழனியாண்டி கூறினார். இந்தபேட்டியின் போது உடனிருந்த திண்டிவனம் ராமமூர்த்தி பஞ்சாயத்து தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளர்கள் கட்சி சின்னத்திலேயே போட்டியிடுவார்கள் என்றுகூறினார்.

ஈழத் தமிழ் தியாகிகள் தங்கதுரை, குட்டிமணி ஆகியோரின் இல்லங்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் சென்று அவர்களின்படங்களுக்கு மாலை அணிவித்து அஞ்சலி செலுத்தினார். அவர்களின் குடும்பத்தினருக்கு ஆறுதல் தெரிவித்தார். நிதி அமைச்சர் டாக்டா நாவலர், அமைச்சர் ஆர்.எம் வீ. ஆகியோர் உடன் இருக்கிறார்கள்.

## எரிபொருள் சிக்கன இயக்கம்

சென்னை, ஜூலை 27— எரிபொருள் சிக்கன இயக்கம் ஒன்றை நடத்த அரசு உத்தேசித்துள்ளதாக சென்னை சுத்திகரிப்பு ஆலை தனது செய்திக்குறிப்பில் கூறியுள்ளது. இதுபற்றிய விவரமாவது:-

எரிபொருள் சிக்கனத் திட்டங்களின் பலனாக ஏழாவது திட்டக் காலத்தில் சுமார் ரூ. 650 கோடி மதிப்புள்ள பெட்ரோலியப் பொருள்கள் மிச்சப் படுத்தப்படும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

பெட்ரோல் அதிவேகடீசல் இலேசு ரக டீசல் ரயில் உலை எண்ணெய், மண்ணெண்ணெய் வகைகள் ஆகிய பெட்ரோலியப் பொருட்களை பயன்படுத்துவதில் சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதற்கு விசேஷ நடவடிக்கைகளை மேற்கொள்ளத் திட்டமிடப்பட்டுள்ளது.

ஆண்டு தோறும்30 முதல் 40 லட்சம்டன் வரையிலான பெட்ரோலியப் பொருட்களை வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதால் இந்த சிக்கன நடவடிக்கைகள் அத்தியாவசியமானவை என்று அரசு கருதுகிறது.

இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

## செய்யாறு வட்டத்தில் மனு நீதி நாள்

செய்யாறு, ஜூலை 27— செய்யாறு வட்டம் திருமணி கிராமத்தில் கிராம அளவிலான மனு நீதி நாள் மாவட்ட ஆட்சித் தலைவர் தானியல் குணாநிதி தலைமையில் நடைபெற்றது. அப்போது அவரிடம் பொதுமக்கள் குறைகள்கொண்ட 220 மனுக்கள் கொடுக்கப்பட்டன. இந்த மனுக்கள் மீது உடனடி நடவடிக்கை எடுக்கப்பட்டது.

இது தவிர ஏழை, எளிய மக்களுக்கு அரசு நலத் திட்டத்தின் கீழ் தையல் மிஷின்கள், சலவைப்பெட்டிகள் சவரப் பெட்டிகள் மற்றும் வீட்டுமனைப் பட்டாக்களை ஆட்சித் தலைவர் வழங்கினார்.

## சந்தனமரம் கடத்தல் பலர் கைது

சென்னை, ஜூலை27- தமிழ் நாட்டில்கடந்தமார்ச் ஏப்ரல் மாதங்களில் 16 ஆயிரம் கிலோமதிப்புள்ள சந்தன மரங்கள் திருட்டுத்தனமாக கடத்தப்பட்டன, இதன் மதிப்பு 7லட்சம் ரூபாய் ஆகும். இந்த கடத்தல் சம்பந்தமாக பலரை வனத் துறை போலீசார் கைது செய்து வழக்கு தொடர்ந்துள்ளன.

# பஞ்சாப் உடன்பாடு: அகாலிதளம் ஏற்றது

## பிரதமர் ராஜீவுக்கு பாகிஸ்தான பாராட்டு

**அனந்தப்பூர் சாகிப் (பஞ்சாப்) ஜூலை 27-பிரதமர் ராஜீவுக்கும் அகாலி தளத்தலைவர் அர்சந்த்சிங் லோங் கோவாலுக்கும் ஏற்பட்ட பஞ்சாப் உடன்படிக்கையை அகாலிதளம் அங்கீகரித்து ஏற்றுக்கொண்டது.**

தீராத தலைவலியாக இருந்த பஞ்சாப் பிரச்சினைக்குத் தீர்வு கண்ட பிரதமரை பாகிஸ்தான் அரசு ஏடு பாராட்டியுள்ளது.

அகாலி தளக்கட்சியின் கூட்டம் பஞ்சாபில் அனந்தப்பூர் சாகிப் என்ற இடத்தில் நடந்தது.

இந்த கூட்டத்தில் பஞ்சாப் பிரச்சினை உடன்படிக்கைபற்றி விவாதிக்கப் பட்டது. அதை ஏற்றுக் கொள்பவர்கள் கையை உயர்த்துமாறு கூறிய போது ஒருசிலரைத் தவிர மற்ற அனைவரும் கையை உயர்த்தினர்.

அதன்படி உடன்படிக்கையை அகாலி தளம் அங்கீகரித்ததோடு, 'தர்ம யுத்தப்பேரணியை'யும்ரத்து செய்துவிட்டது.

### பாதல் ஆதரவு

பிரகாஷ்சிங் பாதல் (பஞ்சாப் முன்னாள் முதல்வர்) இதை எதிர்த்தாரா என்று கேட்ட போது. ''அவர் சில விளக்கம்கேட்டார் அவற்றைக் கூறிய பின் ஏற்றுக் கொண்டார். ஆதரவுத் தீர்மானம் ஒருமனதாகநிறைவேறியது' என்று லோங்கோவால் கூறினார்.

### அமெரிக்கா புகழாரம்

பஞ்சாப் பிரச்சினையை சுமுகமாக தீர்த்து வைத்த பிரதமர் ராஜீவ்காந்திக்கு அமெரிக்கா இங்கிலாந்து முதலிய நாடுகளைச் சேர்ந்த பத்திரிகைகள் புகழாரம் சூட்டியுள்ளன.

கடந்த 4 ஆண்டுகளாக நீடித்துவந்த பஞ்சாப் பிரச்னையை சுமுகமாக தீர்த்துவைப்பதில் பிரதமர் ராஜீவ்காந்தி தீவிர முயற்சிகளில் ஈடுபட்டு வந்தார்.

இதைத்தொடர்ந்து பஞ்சாப்பிரச்னைக்கு ஒரு நல்ல தீர்வு காணப்பட்டது.

பிரதமர் ராஜீவ்காந்திக்கும் அகாலித்தளத்தலைவர் லோங்கோவாலுக்கும் இடையே ஒப்பந்தம் ஏற்பட்டது.

பஞ்சாப் பிரச்சினைக்கு இப்படி சுமுகமான தீர்வை ஏற்படுத்திய பிரதமர்ராஜீவ் காந்தியை அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய நாடுகளில் உள்ள பிரபலபத்திரிகைகள் பாராட்டியிருக்கின்றன.

இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தி ஒரு சிறந்த அரசியல் [illegible] ராஜதந்திரி, திறமை மிகுந்த நிர்வாகி என்று அமெரிக்கப் பத்திரிகை நியூயார்க் டைம்ஸ்'' புகழாரம் சூட்டியிருக்கிறது.

பஞ்சாப் ஒப்பந்தம் இந்தியாவின் ஒற்றுமையையும்ஒருமைப் பாட்டையும் மேன் மேலும் பலப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது என்றும் நியூயார்க்டைம்ஸ்'. தலையங்கம் தீட்டியுள்ளது.

அமெரிக்காவில்இருந்து வெளிவரும் ''கிறிஸ்டியன் சைன்ஸ் மானிடர்' என்ற மற்றொரு பிரபல பத்திரிக்கையும் ராஜீவைப் பாராட்டி தலையக்கம் எழுதியுள்ளது.

''9மாத கால ஆட்சியிலேயே தான் ஒரு தலை சிறந்த தலைவர் என்பதை ராஜீவ் காந்தி உலக நாடுகளுக்கு படம் பிடித்துக் காட்டி விட்டார் என்று அந்தப்பத்திரிகை எழுதியிருக்கிறது.

நாட்டின் ஒற்றுமைக்கு உலைவைத்துவந்த பஞ்சாப் பிரச்னையை மிகவும் இளவயதினரான ராஜீவ் காந்தி சிறந்த புத்திகூர்மையுடன் தீர்த்து வைத்துவிட்டார் என்றும் அது குறிப்பிட்டுள்ளது.

இந்தியா ராஜீவின் தலைமையில் மேன்மேலும் முன்னேற்றம் அடையும் என்பதற்கும் இது ஒரு எடுத்துக்காட்டு என்றும் அது பாராட்டியிருக்கிறது.

அமெரிக்காவின்மற்றொரு பத்திரிகையான 'டைம்ஸ்'சும் ராஜீவை பாராட்டியிருக்கிறது.

லண்டனில் இருந்துவெளிவரும் பிரபல பத்திரிகைகள் 'டெய்லி மெயில்' லண்டன் டைம்ஸ் ஆகியவையும் பாராட்டி இருக்கின்றன. நேரு குடும்பத்தின் பெருமைகளை நிலை நிறுத்தும் ஒரு ஒப்பற்ற வாரிசு ராஜீவ்காந்தி என்றும் அது குறிப்பிட்டுள்ளது.

### பாகிஸ்தான் பாராட்டு

பாகிஸ்தான் அரசுக்குச் சொந்தமான''பாகிஸ்தான் டைம்ஸ்''சும் பிரதமர் ராஜீவ் காந்தியைபாராட்டி இருக்கிறது.

இந்தியாவில் மட்டும் இன்றி வெளிநாட்டு மக்களும் போற்றத்தக்க வகையில் பஞ்சாப் ஒப்பநதம் அமைந்துள்ளது என்று பாகிஸ்தான் டைம்ஸ் தனது தலையங்கத்தில் குறிப்பிட்டுள்ளது, பாகிஸ்தானில்இருந்து வெளிவரும் பல்வேறு ஆங்கில பத்திரிகைகள் மற்றும் உருது நாளிதழ்களும்ராஜீவ் காந்தியை பாராட்டி தலையங்கங்கள் எழுதியுள்ளன

# ராங் நம்பரை தடுக்க புஷ் பட்டன் போன்

புதுடெல்லி ஜூலை 27- டெலிபோனில் ஏற்படும் ராங் நம்பரை தடுக்க புஷ்பட்டன் டெலிபோன்கள் அறிமுகம் செய்யப்பட உள்ளதாகவும், தற்போது 55 லட்சம் டெலிபோன்கள் உற்பத்தி செய்யப்படுவதாகவும்மத்திய அமைச்சர் மிர்தா தெரிவித்தார்.

முக்கிய நகரங்களில்டெலிபோன்கள் ராங் நம்பர்களாக கிடைப்பதுபற்றியும் அடிக்கடி பழுதடைவது குறித்தும் விவாதிக்க டெல்லி மேல் சபையில் கழக உறுப்பினர் ராமகிருஷ்ணனும் வேறு 8 உறுப்பினர்களும் கவன ஈர்ப்புத் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தனர்.

இந்தத் தீர்மானத்தின் மீது ராமகிருஷ்ணன் பேசுகையில் கூறியதாவது:-

பெரிய நகரங்களில் டெலிபோன்கள் அடிக்கடி பழுதடைகின்றன, எப்போதும் ராங்நம்பர்கள் தான் கிடைக்கின்றன.

சரியான நம்பர் கிடைக்கும் முன்பு 3 ராங்நம்பர்களாவது விழுந்துவிடுகிறது. டெலிபோன் இலாகாவுக்கு ராங் நம்பர் மூலம் தான் அதிக வருமானம் கிடைக்குமென்று நினைக்கிறேன்.

குறிப்பாக சென்னையில் டெலிபோன் [illegible] மோசமாக இருக்கிறது.

இந்தியாவிலேயே சென்னையில்தான் டெலிபோன்கள் மிகவும் மோசமாக செயல்படுகின்றன.

இந்தியாமற்றதுறைகளில் எல்லாம் முன்னேறிக்கொண்டிருக்கும் இந்த சமயத்தில் டெலி போன் மட்டும் படும் மோசமாக போய்க் கொண்டிருப்பது வியப்பாக இருக்கிறது.

இவ்வாறு ராமகிருஷ்ணன் பேசினார். இந்த கவன ஈர்ப்பு தீர்மானத்தின் மீது வேறு 8 உறுப்பினர்களும் பேசினர்.

இதற்குப் பதிலளித்து அமைச்சர் மிர்தா பேசுகையில் கூறியதாவது:-

மழை காலங்களில் பெரிய நகரங்களில் ஏற்படும் டெலிபோன்குறைகளைப் போக்க அரசு தீவிர முயற்சி மேற்கொண்டுள்ளது.

### பொத்தான் முறை

டெலிபோன்களை டயல் செய்வதற்கு பதிலாக 'புஷ்பட்டன்' முறையில் இயங்கும் டெலிபோன்களை அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது.

பெங்களூரிலும், நைனியிலும் உள்ள டெலிபோன் தயாரிக்கும் தொழிற்சாலையில் இதுபோன்ற 5 லட்சம் டெலிபோன்கள் தயாரிக்கப்பட்டு வருகின்றன.

முந்தைய திட்டங்களில் தொலை தொடர்புக்கு குறைவான நிதிஒதுக்கியதே தற்போதைய குறைபாடுகளுக்கு காரணம். 7வது ஐந்தாண்டு திட்டத்தில் தொலை தொடர்புவசதிக்கு 12 ஆயிரம் கோடி ரூபாய் செலவிட திட்டக்கமிஷன் ஒப்புக் கொண்டுள்ளது.

தொலை தொடர்பில் நவீன முறைகள் புகுத்தப்படுவதோடு விண்வெளிக்கோள் மூலம் ஏற்படும் தொலைத் தொடர்பு வசதியைமேலும் விரிவாக்க திட்டமிடப்பட்டுள்ளது.

இவ்வாறு மிர்தா கூறினார்.

## தமிழ்நாடு தீயணைப்புத்துறை
### சென்னை
### ஒப்பந்த அறிவிப்பு

தமிழ்நாடு தீயணைப்புத் துறைக்கு 1985-86 நிதியாண்டிற்கு தேவைப்படும் (1) தீயணைப்பு மீட்பு பணி நோயாளி ஊர்திக்கான உபகரணங்கள் (2) சீருடை சொந்த சாதனங்கள் மற்றும் (3) நுகர் பொருட்கள் இதர பொருட்கள் ஆகியவை வழங்குதலுக்கான முத்திரையிட்ட ஒப்பந்த விதிமுறைகள், மூன்று தொகுதியான பண்டங்களின் தேவைப் பட்டியல்கள் முதலியவைகளை சென்னை—8. எழும்பூர், மார்ஷல்ஸ் சாலையின் 12 இலக்கமிட்ட தீயணைப்புத் துறை இயக்குநர் அலுவலகத்தில் கட்டணம் செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம். இதற்கான கட்டணம் ரூ. 10.50 (ரூபாய் பத்து மற்றும் பைசா ஐம்பது மட்டும்) மேற் குறிப்பிட்ட அலுவலகத்தில் நேரில் ரொக்கமாகவோ அல்லது அஞ்சல் பண ஆணையாகவோ (Mon y Order) செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம், இக்கட்டணம் திருப்பித் தரத்தக்கதல்ல. ஒப்பந்த விவரத் தாள்களை அரக்கு முத்திரையிட்ட உறைகளில் "1985-86-ம் ஆண்டு தீயணைப்புத் துறை ஒப்பந்தப் புள்ளி தேவை விவரம்" என உறையின் மேல் குறிப்பிட்டு பெயர் உறைகளில் இயக்குநர், தமிழ்நாடு தீயணைப்புத்துறை, 12, மார்ஷல்ஸ் சாலை, சென்னை—600008 முகவரியிட்டு 1985-ம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 29ம்தேதி வியாழக்கிழமை மாலை 4மணிக்கு முன்னர் கிடைக்கும் படி அனுப்பப்படல் வேண்டும்.

பெறப்படும் உறைகள் தமிழ்நாடு தீயணைப்புத்துறை இயக்குநர் அலுவலகத்தில் 1985-ம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 30ம்தேதி வெள்ளிக்கிழமை காலை 11.00 மணிக்கு, ஆஜர் ஆகியுள்ள ஒப்பந்தக்காரர்கள் அவர்களின் முகவர்களின் முன்னிலையில் திறக்கப்படும்.

இந்திய தர நிர்ணய கழகத்தினரால் அங்கீகரிக்கப்பட்ட பொருட்களுக்கு தக்கவகை முன்னுரிமை அளிக்கப்படும்.

கி. சீதாராமன்,
இயக்குநர்
தமிழ்நாடு
தீயணைப்புத்துறை
சென்னை—600 008
நாள்: 16-7-85

டி.ஐ.பி.ஆர்.
27655/85-20 (ஆர்)

# ஒரு நடிகையின் துயர முடிவு

சுமார் 50 க்கும் மேற்பட்ட திரைப்படங்களில் நடித்து புகழ் உச்சியில் இருந்த பிரபல சினிமா நடிகை மகுவாராய் சவுத்திரி கல்கத்தாவில் கடந்த 11ம் தேதியில் மர்மமான முறையில் மரணம் அடைந்தது தெரிந்ததே.

அவரது திடீர் மரணம் கல்கத்தா மட்டும் அல்ல, மேற்கு வங்காள மக்களிடையே பெரும்பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது.

மகுவாராய் சவுத்திரிக்கு மேற்குவங்காளத்தில் ஏராளமான ரசிகர்கள் உள்ளனர். அவருக்கு 26 வயது. இதற்குள் மளமளவென்று 50க்கும் மேற்பட்ட திரைப்படங்களில் நடித்து விட்டார். மேலும் 20 திரைப்படங்கள் அவருக்குக் கைவசம் இருந்தன.

மேற்குவங்க திரைப்படப்பிடிப்புகளில் 3 ஷிப்ட்களிலும் தொடர்ந்து நடிடும்ஒரே நடிகை இந்த மகுவாராய் சவுத்திரிதான். அவ்வளவு புகழ் பெற்ற நடிகை, சமையல் செய்யும் போது ஸ்டவ் வெடித்து தீவிபத்துக்குள்ளானார் என்று கதைவிட்டால் யார் தான் நம்டவார்கள்?

போலீசாருக்கு இந்த மரணம் குறித்து சந்தேகம் ஏற்பட்டது.

பார்ப்பதற்கு பிரபல இந்தி நடிகை ஷர்மிளா தாகூர் போல இருக்கும் மகுவாராய் சவுத்திரி தன்னுடைய நடிப்பின் மூலம் ஏராளமான பேரும் புகழும் பெற்றவர்.

பலத்த தீக்காயங்களுடன் கடந்த 11-ந் தேதி நள்ளிரவில் அவர் கல்கத்தா மருத்துவமனை ஒன்றில் அனுமதிக்கப்பட்டார். ஆனால் அதே இரவில் சற்று முன்னதாக ஒரு விழாவிலும் அவர் கலந்து கொண்டிருக்கிறார். அவர் வசித்து வந்த மாடிக் கட்டிடத்தின் மற்றொரு அறையில்தான் இந்தவிருந்து உபசாரம் எல்லாம் நடந்திருக்கிறது. கல்கத்தாவைச் சேர்ந்த திரைப்பட இயக்குனர் வங்காளதேச திரைப்பட இயக்குனர் மற்றும்பிரபலசினிமாபுள்ளிகளும் இந்த விழாவில் கலந்து கொண்டிருக்கிறார்கள். வங்காளதேச திரைப்படம்ஒன்றுக்கும்மகுவாராய் சவுத்திரி அண்மையில் ஒப்பந்தம் செய்யப்பட்டிருந்தார்.

### சாவில் மர்மம்

அந்தப்படத்தில் நடிக்க மகுவாவை ஒப்பந்தம் செய்த இயக்குனரும் அந்த விழாவில் கலந்து கொண்டாராம்.

விழாவில் மகிழ்ச்சியுடன் கலந்து கொண்டு விட்டு தன்னுடைய வீட்டுக்குவந்த நடிகைக்கு இந்த விபத்து எப்படி ஏற்பட்டது. அது தான் ஒரே மர்மமாக இருக்கிறது.

ஆனால் போலீசார் இதை விட்டுவிடுவதாக இல்லை. கல்கத்தா ரகசிய போலீசார் இதுகுறித்து தீவிர புலன் விசாரணை செய்யவிருக்கிறார்கள்.

மேற்கு வங்க போலீஸ் டைரக்டர் ஜெனரல் ராமன் பட்டாச்சாரியா இந்த வழக்கு பற்றிய விசாரணையை தீவிரப்படுத்தியுள்ளார்.

தீப்புண்களுடன் மகுவா மருத்துவமனைக்கு கொண்டு வரப்பட்டபோது அவர்மீது வேசாக மண்ணெண்ணெய் வாடை வீசியது என்கிறார் அவருக்கு சிகிச்சை அளித்த டாக்டர். ஆனால் மகுவா வசித்து வந்த அறையில் இருந்த ஸ்டவ் அடுப்பில் மண்ணெண்ணெய் ஒரு துளி கூட இல்லை.

மற்றும் ஒரு உண்மை போலீசுக்குப் புலன்ஆயிற்று ஸ்டவ் வெடித்து தீப்பற்றியிருந்தால் நடிகையின் முன் பக்கம், முகம், மார்பு, வயிறு இப்படிஎங்கேயாவது தீக்காயம் இருக்க வாய்ப்பு உண்டு. ஆனால் நடிகையின் முதுகுப் புறத்தில் தான் பலத்த தீக்காயங்கள் ஏற்பட்டுள்ளன இது போலீசுக்கு வியப்பை ஏற்படுத்தியது. இறந்த நடிகையின் கணவரும் தகப்பனாரும் கொடுத்தவாக்குமூலங்களும் ஒன்றுக்கு ஒன்று முரணாக இருக்கின்றன.

ஸ்டவ் வெடித்ததால்தான் நடிகை மகுவாசவுத்திரிக்கு தீக்காயங்கள் ஏற்பட்டது என்று மட்டும் பொதுவாகச் சொல்லுகிறார்கள், அதற்கு மேல் அவர்கள் ஒன்றும் சொல்ல மறுக்கிறார்கள். போலீசார் மற்ற உறவினர்களிடமும் விசாரித்தனர்.

மகுவாவின் திடீர் சாவு பற்றி அவர்கள் கொடுத்த தகவல்கள் ஒன்றுடன் ஒன்று கொஞ்சமும் பொருந்தவே இல்லை. தனக்கு சற்று உணர்வு வந்தபோது நடிகை மகுவா கொடுத்த மரண வாக்குமூலம் இது தான் பழுதடைந்த ஸ்டவ் எரியும்போது எனக்கு விபத்துஏற்பட்டது' என்பது தான்.

ஆனால் போலீசார் இந்த வழக்கை விட்டுவிட்டதயாராக இல்லை. கல்கத்தா நகரரகசிய போலீசார் இது குறித்து தீவிரபுலன் விசாரணை செய்ய டி.ஜி.பி. ராமன் பட்டாச்சாரியா உத்தர விட்டுள்ளார்.

போலீசாருக்கு ஒன்று மட்டும் நன்றாகதெரிகிறது. நடிகை மகுவா சவுத்திரியின் மரணத்தில் ஏதோ மர்மம் இருக்கிறது.

இதில் ஒரு சிலதிரைப்படபுள்ளிகள் சம்பந்தபட்டிருக்கிறார்கள் என்பது தான்.

### செங்கை மாவட்ட கழகக் குழு ஆலோசனை கூட்டம்

சென்னை, ஜூலை 27— அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் செங்கை மாவட்டக் குழுக்கூட்டம் இம் மாதம் 30-ந்தேதி காலை பத்து மணிக்கு மாவட்ட அவைத்தலைவர் பாக்கூர் சுப்பிரமணியம் தலைமையில் ஊரகத் தொழில் துறை அமைச்சர் ஆனூர் கோ. ஜெகதீசன் தலைமையில் நடைபெறுகிறது.

வாரியத் தலைவர்கள், நாடாளுமன்ற, சட்டமன்ற மேலவை உறுப்பினர்களும் ஒன்றிய நகர நகரியச் செயலாளர்களும் மாவட்டப் பிரதிநிதிகளும் இந்தக் கூட்டத்தில் தவறாது கலந்து கொள்ள வேண்டும் என்று முனிரத்தினம் கேட்டுக் கொண்டு இருக்கிறார்.

# பூட்டோ மகன் உடல் பாகிஸ்தானுக்குஎடுத்து வருவதில் சிக்கல்

நைஸ், (பிரான்ஸ்) ஜூலை, 27— பிரான்ஸ்நாட்டில்மரணம் அடைந்த பூட்டோவின் இளைய மகன் ஷாநவாஸ் கானின் உடலை பாகிஸ்தானுக்குக் கொண்டு வருவதில் சிக்கல் ஏற்பட்டுள்ளது.

பாகிஸ்தானின் முன்னாள் பிரதமர் பூட்டோவின் இளைய மகன் ஷாநவாஸ் கான் பாரிஸ் அருகே உள்ள கான்னஸ் நகரில் ஒரு ஓட்டலில் செத்துக்கிடந்தது தெரிந்ததே.

ஷாநவாஸ்கான் எப்படி இறந்தார் என்பதுஇன்னும் மர்மமாகவே இருந்து வருகிறது.

இந்தநிலையில்ஷாநவாஸ் கானின் உடலை பாகிஸ்தானுக்குக் கொண்டு வந்து அவரது தந்தை பூட்டோவின் உடல் புதைக்கப்பட்ட கல்லறைக்குப் பக்கத்திலேயே அடக்கம் செய்ய பாகிஸ்தான் மக்கள் கட்சி நடவடிக்கை எடுத்து வருகிறது. பூட்டோவின் மூத்தமகள் பெனாசிர் அந்த உடலை பிரான்சில் இருந்து எடுத்து வருவதாகவும் அறிவிக்கப்பட்டிருந்தது.

ஷாநவாசின் உடலை பாகிஸ்தானுக்குக் கொண்டு வருவதில் இப்போது சிக்கல் ஏற்பட்டுள்ளது.

ஷாநவாஸ் கான் எப்படி இறந்தார்? தற்கொலையா அல்லது கொலையா என்பதை கண்டு பிடிப்பதில் பிரான்ஸ் நாட்டு அரசு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது.

அதைக் கண்டறிய நீதபதி ஒருவரும் நயமிக்கப்பட்டு விசாரணை தொடங்கி விட்டது.

பிரான்ஸ்நாட்டு சட்டப்படி மர்மமான முறையில் இறந்தவர் பற்றிய விசாரணை முடிந்து தீர்ப்பு அளிக்கப்பட்ட பின்னர் தான் அந்த உடலை உறவினர் எடுத்துச் செல்ல அனுமதி அளிக்கப்படும்.

இந்தநிலையில்ஷாநவாஸ் கானின் உடல் பாகிஸ்தானுக்கு எடுத்துச் செல்ல குறைந்தபட்சம் 2 வாரம் பிடிக்கும் என்று தெரிகிறது,

ஷாநவாஸ்கான் கொலை செய்யப்பட்டுள்ளார் என்று பாகிஸ்தான் மக்கள் கட்சி குற்றம் சாட்டியுள்ளது.

### புயல்எச்சரிக்கை புதிய கருவி

ராமநாதபுரம், ஜூலை 27— புயல் வருவதை முன் கூட்டியே அறிந்து எச்சரிக்கை விடுக்கும் நவீன கருவிகள் ராமனாதபுரம் மாவட்ட கடற் கரை பகுதியில் அமைக்கப்பட்டிருக்கிறது.

அங்கு 9இடங்களில் நவீன கருவிகள் கொண்ட புயல் எச்சரிக்கை மையங்கள் அமைக்கப்பட்டு இருக்கின்றன. இந்த மையங்கள் செப்டம்பர் மாதம் முதல் செயல்படும்.

### 10 ஆயிரம் மக்கள் வெள்ளத்தில் தத்தளிப்பு

தாகா, ஜூலை 27- வங்காள தேசத்தில் மீண்டும் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டுள்ளது. பிரம்மபுத்திரா தீஸ்தா, தாரலா ஆகிய நதிகள் பெருகி உடைப்பு எடுத்துள்ளன. இதனால் ஊருக்குள் வெள்ளம் புகுந்து 10 ஆயிரம் பேர் வீடிழந்து தவிக்கிறார்கள். 10 ஆயிரம் ஏக்கர் சாகுபடி நிலம் வெள்ளக் காடாகிவிட்டது.

# ராஜ்யசபை தேர்தல்: இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் யார்?

பாண்டிச்சேரி, ஜூலை 27—புதுவை மாநிலத்திலிருந்து ராஜ்ய சபைத் தேர்தலுக்கு இந்திராகாங்கிரஸ்வேட்பாளராக நாராயணசாமி போட்டியிடுகிறார்.

புதுவை மாநில சட்டமன்ற உறுப்பினர்கள் ஓட்டுப் போட்டு ராஜ்ய சபைக்கு ஒரு உறுப்பினரைத் தேர்ந்தெடுப்பார்கள்.

இந்த தேர்தலில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளராக இந்திய தேசிய தொழிற் சங்கக் காங்கிரசைச் சேர்ந்த நாராயணசாமி போட்டியிடுகிறார்.

இவர் இந்திய தேசிய தொழிற்சங்கக் காங்கிரசின் (ஐ. என். டி. யூ. சி.) மாநில செயலாளராவார் பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த இவருக்கு வயது முப்பது. தொழிற் சங்க அனுபவம் மிக்கவர்.

இந்திரா காங்கிரஸ் கட்சி சார்பில் ராஜ்யசபைத் தேர்தலில் போட்டியிட பத்து பேர் விரும்பினர். அவர்களுடைய முழுவிபரங்களும் பிரதமர் ராஜீவ் காந்திக்கு அனுப்பப் பட்டது.

போட்டியிட விரும்பிய பத்துப்பேர்களும் டெல்லிக்கு அழைக்கப்பட்டனர். ஒவ்வொருவரையும் பிரதமர் தனித்தனியாக அழைத்துப் பேசினார்.

அதன் பின்னர் நாராயணசாமி வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்று காங்கிரஸ் வட்டாரங்கள் கூறின.

இந்தத் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளரை அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் ஆதரிக்கும்.

புதுவை சட்டமன்றத்தில் இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு 15 இடங்களும், அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகத்திற்கு ஆறு இடங்களும் இருக்கின்றன.

### ஆதி திராவிடர் வீட்டு வசதி கழகத்துக்கு புதிய தலைவர்

சென்னை, ஜூலை27— தமிழ்நாடு ஆதிதிராவிடர் வீட்டு வசதி மற்றும் அபிவிருத்தி கழகத் தலைவராக எஸ் அன்பழகன் நியமிக்கப்பட்டுள்ளார். இவரது பதவிக் காலம் ஒரு ஆண்டு ஆகும்,

# குழந்தை குட்டிகளுடன் சேறு, சகதியில் நடந்த ராஜீவ்

புல்பானி, ஜூலை 27- ஒரிசா மாநிலத்தில் குழந்தை குட்டிகளுடன் சேறுசகதியில நடந்து சென்றுஆதிவாசிமக்களின் குறைகளைக் கேட்டறிந்தார் பிரதமர் ராஜீவ் காந்தி.

பிரதமர் ராஜீவ் டெல்லியிலிருந்து நேற்றுபிற்பகல்புவனேஸ்வரம் வந்தார். பின் அங்கிருந்து ஒரு ஹெலிகாப்டர் மூலம் புல்பானி மாவட்டத்திலுள்ள மலை சாதி மக்கள் வசிக்கும் பகுதிக்குச் சென்றார்.

அந்தப் பகுதியில் சேறும் சகதியும் நிரம்பி இருந்தது. சேற்றையும் சகதியையும் பொருட்படுத்தாது. பிரதமர் ராஜீவ் அதில் நடந்து சென்று மலைசாதி மக்களின் குறைகளைக் கேட்டறிந்தார்.

சேற்றிலும், சகதியிலும் நடந்துவந்து பிரதமர் தங்கள் பகுதிக்கு வருவதைக் கண்ட மலை சாதி மக்கள் ஆச்சரியத்தில் மூழ்கினாலும் பின்னர் பிரதமரை உற்சாகமாக வரவேற்றனர்.

பிரதமர் ராஜீவ் மலை சாதி மக்களின்குறைகளைக் கேட்டறிந்தார்.

பிரதமர் ராஜீவுடன் அவரது மனைவி சோனியாவும் சென்றிருந்தார். அவரும் பிரதமர் ராஜீவுடன் சேற்றிலும் சகதியிலும் நடந்து சென்றார்.

முன்னதாக பிரதமர் புவனேஸ்வரம் வருவதை யொட்டி விமான நிலையத்தில் பலத்த காவல் போடப்பட்டு இருந்தது அமைச்சர்கள் நாடாளு மன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள், உயர் அதிகாரிகள் மட்டுமே அனுமதிக்கப்பட்டனர். பத்திரிகையாளர்களுக்கு கூட அனுமதி மறுக்கப்பட்டது.

எனினும் பிரதமர் ராஜீவ் அங்கு அமைக்கப்பட்ட மேடையில் தோன்றி மக்களிடையே பேசினார்.

பிரதமரைக்காண ஏராளமான மக்கள் கூடியிருந்தனர்.

# $1\frac{1}{2}$ லட்சம் பேருக்கு மனைப்பட்டா
## மதுரை கலெக்டர் தகவல்

மதுரை, ஜூலை, 27- புரட்சித்தலைவர் ஆட்சி ஏற்பட்ட பிறகு இது வரை 1,53,715 பேருக்கு மதுரை மாவட்டத்தில் வீட்டுமனைப்பட்டாவழங்கப்பட்டதாக மதுரை மாவட்ட ஆட்சித் தலைவர் நிருபர்களிடம் கூறினார். அவர்மேலும்கூறியதாவது:-

1977ம் ஆண்டுக்குப்பிறகு 12,712 பேருக்கு நிலப்பட்டா வழங்கப்பட்டுள்ளது. இதன் மொத்த நிலப்பரப்பு 25,363 ஏக்கர்.

வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழும் 1,58,119 பேருக்கு வீட்டு மனைப்பட்டா வழங்க அரசு முடிவு எடுத்துள்ளது. 36,7?5 குடும்பங்களுக்குவீட்டு மனைப்பட்டா கொடுக்கப்பட்டுவிட்டது. இன்னும் 1,21,380 பேருக்கு வீட்டுமனைப்பட்டா கொடுக்கவேண்டும்.

வீட்டுமனைப்பட்டா கொடுப்பதற்கு 1145.49 ஏக்கர் புறம்போக்கு நிலம் வசம் உள்ளது. மீதி 2,500 ஏக்கர் நிலம் வீட்டு மனைப் பட்டா கொடுக்க கையகப்படுத்த வேண்டி உள்ளது.

நிலங்கள் கையகப்படுத்த ரூ. 1கோடி செலவாகும்.

இவ்வாறு மதுரை மாவட்ட ஆட்சித் தலைவர் இரா. வரதராஜுலு கூறினார்.

### படகு விபத்து: 148 பேர் சாவு

மணிலா ஜூலை 27— கிழக்கு மலேசியா பகுதியிலுள்ள செபா என்னுமிடத்திற்கருகே 148பிலிப்பைன்ஸ் பயணிகள் பயணம் செய்த ஒரு நாட்டுப் படகு பாறையில் மோதியதால் அந்தப் படகிலிருந்த அனைவரும் இறந்ததாக அஞ்சப்படுகிறது.

இவர்கள் வேலை தேடி மலேசியா சென்றதாகத் தெரிகிறது.

### வை. பெருமாள் நிகழ்ச்சி மாற்றம்

கோவை மாவட்டத்தில் மாவட்ட செயலாளர் மலரவன் ஏற்பாடு செய்திருந்த 29நதேதிபொதுகூட்டத்தில் வை. பெருமாள் கலந்து கொண்டு பேசுவதாக இருந்தது. தற்போது அந்த கூட்டம் வரும் ஆகஸ்டு 9, 10 ஆகிய தேதிகளுக்கு மாற்றபட்டுள்ளது.

## தமிழ் நாடு மின்சார வாரியம்

1948 ஆம் ஆண்டு மின்வழங்கு சட்டத்தின், பிரிவு 29 (3) (1)-இன்படி, பொதுமக்களுக்கு அறிவிப்பு.

அத்திக்கடவு அணை 2×2.5மெ.வா திறன் கொண்ட சிறிய புனல் மின் நிலையம் நிறுவுதல்.

கோவைக்கு குடிநீர் வழங்க பவானி மற்றும் மன்னார் நதிகள் சேரும் இடத்திற்குக் கீழே அத்திக்கடவு அணை கட்டப்பட உள்ளது. இவ்வணையின் அடிவாரத்தில், ஒரு புனல் மின் நிலையம் நிறுவ திட்டமிடப்பட்டுள்ளது.

இத் திட்டத்தின் சிறப்பு அம்சங்களாவன:

1. 440 மீ. நீளமுள்ள செங்கல்— மண் அணையும், 30மீ. நீளமுள்ள நீர் போக்கு குழாயும் நிறுவுதல்.
2. ஒவ்வொன்றும் 2.5 மெ.வா. திறன் கொண்ட இரண்டு மின் அலகுகளுடன் மின் நிலையம் அமைத்தல்.
3. சராசரி ஆண்டு மின் உற்பத்தி: 16.63மி யூனிட்டுகள்
4. வருட வருவாய் : 17.84%
5. திட்ட மதிப்பீட்டுத்தொகை : ரூபாய் 480.00லட்சம்

பொதுமக்கள் இது குறித்து தங்களுடைய கருத்தை தலைமைப்பொறியாளர் கீழ் மேட்டூர் புனல் மின் திட்டம். தமிழ்நாடு மின்சார வாரியம் 791, அண்ணாசாலை சென்னை—600 002 என்ற முகவரிக்கு இந்த அறிவிப்பு வெளியாகும் நாளிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் எழுத்து வாயிலாகத் தெரிவிக்கலாம்,

தலைமைப் பொறியாளர்
கீழ் மேட்டூர் புனல் மின் திட்டம்

டி.ஐ.பி.ஆர் 27646-85- (ஆர்)

## தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக் கழகம்

கோயமுத்தூர்- 641003

டெண்டர் அறிக்கை எண் CAPITAL- NARP- ICAR- தேதி 15-7-1985.

தமிழ்நாடு வேளாண்மைக் கழகம். கோயமுத்தூர் அவர்கள் சார்பில்; அவர்களுக்காக கீழ்காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் அரசு இலாக்காக்கள்/ அரசு நிறுவனங்கள் ஆகியவற்றில் உரிய வகுப்புகளில் பதிவு செய்துள்ள காண்ட்ராக்டர்களிடமிருந்து வரவேற்கப்படுகின்றது.

ஒப்பந்த விவரம்- "மொத்த தொகை"

| வ. எண் | வேலையின் பெயர் | ஒப்பந்த தாரரின் பதிவு செய்யப்பட்ட வகுப்பு | வேலை முடிக்கப்பட வேண்டிய காலம் | டேவணித் தொகை டெபாசிட் ரூபாய் |
|---|---|---|---|---|
| | ICAR | | | |
| 1. | காட்டுப்பாக்கம், கால்நடை ஆராய்ச்சிநிலையத்திற்கு, ஸ்லாட்டர் ஹவுஸ், ஊழியர்கள் அறை, குளிர்பதன அறை, கழுவுதல் மற்றும் ஸ்டெரிலிசேஷன் அறை, ஆடுகளுக்கான ஷெட் முதலியன கட்டுதல்..... | IIIவது வகுப்பு மற்றும் அதற்கு மேல் | 6 மாதங்கள் | 2,500- |
| | NARP | | | |
| 2. | புதுக்கோட்டைமாவட்டம், வாம்பனிலுள்ள தேசிய விதைகள் (Pulses) ஆராய்ச்சி நிலையத்திற்கு சுற்றிலும் இரும்பு (Barbed Wire) வேலி அமைத்தல்..... | IIIவது வகுப்பு மற்றும் அதற்கு மேல் | 4 மாதங்கள் | 2,000/- |
| 3. | பையூர் வட்டார ஆராய்ச்சி நிலையத்திற்கு ஒருமேல் நிலை நீர்தொட்டி கட்டுதல்..... | IVவது வகுப்பு மற்றும் அதற்கு மேல் | 4 மாதங்கள் | 1,600/- |
| 4. | கோயமுத்தூர், தமிழ்நாடு, வேளாண்மை பல்கலைக்கழகத்திலுள்ள விதைகள் ஆராய்ச்சி நிலையச் சோதனைசாலை கட்டுதல்...... | IIIவது வகுப்பு மற்றும் அதற்கு மேல் | 6 மாதங்கள் | 4,200/ |
| 5. | அருப்புக்கோட்டை, வட்டார ஆராய்ச்சி நிலையத்திற்கு சோதனைச்சாலை கட்டுதல்..... | IAவது வகுப்பு மற்றும் அதற்கு மேலும் | 9 மாதங்கள் | 10,600/- |
| | CAPITAL | | | |
| 6. | கோயமுத்தூர், தமிழ்நாடு, வேளாண்மை பல்கலைக்கழகத்தில் ஒருமேல் நிலை நீர்த் தொட்டி மற்றும்SUMP கட்டுதல்...... | IIIவது வகுப்பு மற்றும் அதற்கு மேல் | 4 மாதங்கள் | 2,400/- |
| 7. | கோயமுத்தூர், தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக்கழகத்தில் விதைகள் பராமரிப்பு கூடம்(Seed Processing Complex) கட்டுதல்— | IIவது வகுப்பு மற்றும் அதற்கு மேல் | 6 மாதங்கள் | 5,200/- |
| 8. | பட்டுக்கோட்டை பல நோக்கு பயிர் சோதனை நிலையத்தில் (Multi-Crop Experiment Station) ஒரு துணைப் பேராசிரியருக்குஒரு குடியிருப்பும் LGGSஒன்றும்கட்டுதல் | IVவது வகுப்பு மற்றும் அதற்கு மேல் | 6 மாதங்கள் | 1,200- |
| 9. | சிறுகமணியில் உள்ள கரும்பு ஆராய்ச்சி துணை நிலையத்திற்கு சோதனைச் சாலை கட்டுதல் | IIIவது வகுப்பு மற்றும் அத்தற்கு மேல் | 4 மாதங்கள் | 3,000- |

ஒவ்வொரு வேலைக்கும் டெண்டர் குறிப்பின் விலை ரூபாய் 52.75.

டெண்டர்கள் பெற்றுக்கொள்வதற்கான இறுதிதேதி 14—8—85 பிற்பகல் 3 மணி.

டெண்டர்கள் திறக்கப்படும் தேதி- 14—8—85 பிற்பகல் 3.30மணி,

டெண்டர் குறிப்புகள், எஸ்டேட்அதிகாரி, தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக் கழகத்திலிருந்து 5—8—85— முதல் 13—8—85 வரை (மாலை 5 மணி வரை) அலுவலக நேரங்களில் எழுத்து மூலமான விண்ணப்பத்துடன் ரொக்கம் செலுத்தி பெற்றுக் கொள்ளலாம். மேற்படி தொகை எக்காரணத்தை முன்னிட்டும் திருப்பியளிக்கப்படமாட்டாது.

டேவணித்தொகை மற்றும் செக்யூரிட்டி டெபாசிட் ஆகியவைகளை ஏதாவது ஒரு தேசியமயமாக்கப்பட்ட வங்கியிலிருந்து "எஸ்டேட் ஆபீஸர், தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக்கழகம் கோயமுத்தூர்—3 அவர்கள் சார்பில் எடுக்கப்பட்ட டிமாண்ட் டிராப்டாக அனுப்ப வேண்டும். மற்றவைகளில் செலுத்தும் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. வெற்றிபெறாத டெண்டர்தாரர்களுக்கு டேவணித்தொகை திருப்பி அனுப்பப்படும்.

டெண்டர்கள் முத்திரையிட்ட கவர்களில் எஸ்டேட் அதிகாரி, தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக்கழகம், கோயமுத்தூர்-3 அவர்கள் விலாசமிட்டு, கவரின் பேரில் வேலையின் பெயரை குறிப்பிட்டு கோயமுத்தூர் 3 தமிழ்நாடு வேளாண்மைக் பல்கலைக் கழகத்தின், எஸ்டேட் அதிகாரி அவர்களுக்கு 14—8—85 பிற்பகல் 3-மணிக்கு முன்னதாக வந்துசேரும்படி அனுப்பபட வேண்டும்.

டெண்டர்கள் பெற்றுக்கொள்வதற்கான குறிப்பிட்டுள்ள இறுதி தேதி பொதுவிடுமுறை தினமாக இருப்பின் டெண்டர்கள் அதற்கு அடுத்த தினம் பிற்பகல் 3-மணி வரை பெற்றுக்கொள்ளப்படும்.

எவ்வித காரணமும் காட்டாமல் எந்த ஒரு டெண்டரையோ அல்லது எல்லா டெண்டர்களையுமே நிராகரிக்க கோயமுத்தூர், தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக் கழகத்தின் எஸ்டேட் அதிகாரிக்கு பூரண உரிமையுண்டு.

எஸ்டேட் அதிகாரி

DIPR 2765?/85 14/Aries